உ

தேவராய சுவாமிகள் இயற்றிய

# கந்தர் சஷ்டி கவசம்

( தெளிவுரையுடன் )

*தெளிவுரையாசிரியர் :*

**வித்துவான் கா. ம. கண்ணப்பன்,** எம். ஏ.,

*வெளியீடு :*

அன்னபூர்ணா பதிப்பகம்

திருப்பனந்தாள் – 612 504.

முதற்பதிப்பு :
இரக்தாக்ஷி - ஆவணி - 1984.

விலை ரூ. 1—00.

தெளிவுரை :
வித்துவான் கா. ம. கண்ணப்பன், எம். ஏ.,
தருமபுரம்.

விற்பனை உரிமை :
ம. வே. சுவாமிநாதன்.
உரிமையாளர்,
அன்னபூர்ணா பதிப்பகம்,
7, சன்னிதித்தெரு,
திருப்பனந்தாள் - 612 504.

அச்சகம் :
ஞானசம்பந்தம் அச்சகம்,
தருமபுரம் - மயிலாடுதுறை 609 001.

# பதிப்புரை

உலகம் நலம்பெற முருகக்கடவுள்மீது ஆன்றோர் பலர் கந்தர் சஷ்டி கவசம், கந்தர்கலி வெண்பா, கந்தபுராணம், கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், திருப்புகழ், திருமுரு காற்றுப்படை என்று பல பாராயண நூல்களை யாத்திருக் கிறார்கள். அவைகளில் குறிப்பிடத்தக்க இடம் வகிக்கும் பாராயணநூல் கந்தர் சஷ்டி கவசமாகும்.

ஸ்ரீ தேவராய சுவாமிகள் இயற்றிய இத் தோத்திரநூல் 238 அடிகள் கொண்ட நிலை மண்டில ஆசிரியப்பாவால் ஆகியது. அடியார்கள், தம்மைக்காக்குமாறு முருகப் பெருமானிடம் வேண்டி, முருகப்பெருமானுக்குரிய சஷ்டி நாளில் சிறப்பாகப் பாராயணம் செய்யத்தக்க நூல். "கவசம்" என்னும் சொல் பகைவர்கள், ஆயுதம் முதலிய வற்றால் தாக்கும்போது, துன்பம் நேராதபடி காப்பாற்றக் கூடிய மார்பில் அணியும் இரும்பு உறையைக் குறிக்கும். இந்தநூல், கவசம் போலப் பாராயணம் செய்வோர்க்குப் பாதுகாப்புத் தரவல்லது; ஆதலால், 'கந்தர் சஷ்டி கவசம்' என்னும் பெயர் உடையதாயிற்று.

யாதுமொன்றறியா என்னை வாழ்விக்க வேண்டி எளியேற்குப் பணியருளியும் அன்னபூர்ண பதிப்பக வெளியீட்டுப்பணி, விற்பனைப் பணிகளைத் தொடர்ந்து செய்ய அனுமதித்தும் அருள்பாலித்த **தருமையாதீனம் 2[illegible]து குருமகாசந்நிதானம்** அவர்களுக்கு மனம்

மொழி, மெய்களால் ஆகிய வந்தனை வழிபாடுகளைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை இடையறுதுவாழ்விக்கும் வள்ளல், பெங்களூர் வெங்கடேசா கல்விச்சங்கத்து நிறுவனர் - செயலர் - தாளாளர் ஆகிய உயர்திரு **ம. வே. ஜெயராமன்** அவர்களின் திருவடிகள் என் தலைமேலன.

இந்த நூலுக்குப் பல உரைகள் உண்டு, இப்பொழுது இந்நூலுக்கு உரை எழுதியிருப்பவர், தருமபுர ஆதீனம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன் எம். ஏ., ஆவார். இவர்க்கு மனமார்ந்த நன்றி.

அன்பர்கள் இந்நூலைப்பெற்றுஓதி முருகன் திருவருளைப் பெற்று உய்க! வணக்கம்.

அன்பன்,

7, சன்னிதித்தெரு,
திருப்பனந்தாள்.
அ.கு.எ. - 612504

**ம. வே. சுவாமிநாதன்**

பதிப்பாசிரியர்.

*(18—8—1984)*

உ

சிவமயம்

# கந்தர் சஷ்டி கவசம்

காப்பு

அமரரிடர் தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

துதிப்போர்க்குவல்வினைபோம்துன்பம்போம்நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக் — கதித்தோங்கும்
நிட்டையுங்கை கூடும் நிமலரருள் கந்தர்
சட்டி கவசந் தனை.

நூல்

சட்டியை நோக்கச் சரவண பவனார்
சிட்டருக் குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட
மைய நடஞ்செயும் மயில்வா கனனார்

கையில்வே லாலெனைக் காக்கவென் றுவந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக

வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக

சரவண பவனார் சடுதியில் வருக
ரவண பவச ரரரர ரரர
ரிவண பவச ரிரிரி ரிரிரி
விணபவ சரவ வீரா நமோநம
நிபவ சரவண நிறநிற நிறென

வசர வணப வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை யாளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசஅங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க

விரைந்தெனைக் காக்க வேலோன் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையும் கிலியும்
கிலியும் சவ்வும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமும் ஒளிரும்

சண்முகன் றீயும் தனியொளி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறு முகமும் அணிமுடி ஆறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச்செவ் வாயும்

நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகுகுண் டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ டணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்
இருதொடை அழகும் இணைமுழந் தாளும்

திருவடி யதனில் சிலம்பொலி முழங்கச்
செககண செககண செககண செகண
மொகமொகமொகமொகமொகமொக மொகென
நக்நக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடு டுடுடு டுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து

முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென் (று)

உன்திரு வடியை உறுதியென் றெண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க

பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க
கதிர்வேல் இரண்டு கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும் வேலவர் காக்க
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க

முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க

சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க

வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி இரண்டும் அயில்வேல் காக்க
பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க

வட்டக் குதத்தை வல்வேல் காக்க
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிரல் அடியிணை அருள்வேல் காக்க
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க

முன்கை இரண்டும் முரண்வேல் காக்க
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க
நாவில் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பால் நாடியை முனைவேல் காக்க

எப்பொழு தும்எனை எதிர்வேல் காக்க
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க

ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்க தாக்க தடையறத் தாக்க

பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாட்டிகப் பேய்கள்
அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழைக்கடை முனியும்

கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமராக் கதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்
எல்லினும் இருட்டிலும்எதிர்படும் அன்னரும்

கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளங்களும்
என்பெயர் சொலவும் இடிவிழுந் தோடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்

பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டியப் பாவையும் ஒட்டியச் செருக்கும்

காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டால் கலங்கிட

அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்

கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில்செதி லாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்

பற்று பற்று பகலவன் தணலெரி
தணலெரி தணலெரி தணலது வாக
விடுவிடு வேலை வெருண்டது வோடப்
புலியும் நரியும் புன்னரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந் தோடத்

தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்துய ரங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க
ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்

சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்து அரணை பருஅரை யாப்பும்

எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லா தோட நீஎனக் கருள்வாய்
ஈரேழ் உலகமும் எனக்குற வாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணா ளரசரும் மகிழ்ந்துற வாகவும்

உன்னைத் துதிக்க உன்திரு நாமம்
சரஹண பவனே சைலொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவமொளி பவனே
அரிதிரு மருகா அமரா வதியைக்

காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர்வே லவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை அழித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா

கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா
பழநிப் பதிவாழ் பால குமரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத் தரசே

காரார் குழலாள் கலைமகள் நன்றாய்
என்நா இருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவச மாக
ஆடினேன் நாடினேன் ஆவினன் பூதியை

நேச முடன்யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புடன் இரக்ஷி அன்னமும் சொன்னமும்
மெத்தமெத் தாக வேலா யுதனார்

சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்

வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்கஎன் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செய்தால்
பெற்றவன் நீகுரு பொறுப்ப துன்கடன்

பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென் றன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தனென் மீதுன் மனமகிழ்ந் தருளித்
தஞ்சமென் றடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சட்டி கவசம் விரும்பிய

பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கம் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்
கந்தர் சட்டி கவச மிதனைச்

சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்துநீ றணிய
அட்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் சேர்ந்தங் கருளுவர்

மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல்லெழில் பெறுவர்
எந்த நாளுமீ ரெட்டா வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத் தடியை

வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்தடி

அறிந்தென துள்ளம் அட்டலட் சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துண வாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்கு உவந்தமு தளித்த
குருபரன் பழநிக் குன்றினில் இருக்கும்

சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி

திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி
உயர்கிரி கனக சபைக்கோ ரரசே

மயில்நட மிடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரஹண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று.

# கந்தர் சஷ்டி கவசம்

## தெளிவுரை

### காப்பு

நெஞ்சமே! தேவர்களின்துன்பம் நீங்கும்படி சூரபதுமன் முதலான அசுரர்களுடன் போர் புரிந்த குமரப்பெருமான் திருவடிகளைத் தியானித்து வழிபாடு செய்வாயாக.

நேரிசை வெண்பா

இயல்பாகவே குற்றங்களின் நீங்கிய சிவபெருமான் பெற்றெடுத்த கந்தரைப் பற்றிய சஷ்டிக் கவசத்தை ( தற் காப்புத்தரும்இம்மந்திரத்தை ) ஆசாரத்துடன் பாராயணம் செய்து முருகப்பெருமானைத் துதிப்பவர்களுக்குக் கொடிய பாவங்கள் நீங்கும்;துன்பங்கள் அகலும்;முருகப்பெருமானை மனத்தில் பதித்துத் தியானம் செய்யும் பக்தர்களுக்குச் செல்வங்கள் வந்து சேரும்; வந்த செல்வங்கள் அனைத்தும் பலவாகப் பெருகும்; மேலும் தம்மனத்தை இறைவனிடம் ஒருமுகமாகச் செலுத்தவல்ல நிஷ்டையும் கைகூடும்; யோக வலிமையும் உண்டாகும்.

### நூல்

1–6 சஷ்டியை நோக்கச் ... ... ... என்று வந்து

சரவணப் பொய்கையில் அவதரித்த முருகனின்சஷ்டி கவசத்தைப் பாராயணம்செய்து, தியானிப்போமாக. தனது அடியவர்களாகிய நல்லோருக்கு உபகாரம்செய்யும்சிவந்த கிரணங்களை வீசும் வேலாயுதத்தைத் தாங்கிய முருகன், தமது இரண்டு பாதங்களிலும் அணிந்த பலமணிகள் வைத்துக் கோக்கப்பெற்ற சதங்கை இசை பாடவும்

'தண்டை' என்னும் ஆபரணம் ஆடவும் பார்ப்பவர் மன மகிழ்ச்சி கொள்ளும் வண்ணம் நடனமாடி வரும் மயில் வாகனம் கொண்ட பெருமான் என்முன் காட்சிதருவார். "முருகப்பெருமானே! கையில் கொண்டுள்ள வேலால் என்னைக் காப்பாற்றுக" என்று மகிழ்ச்சியுடன் வேண்டு வேளுக.

7–10 வரவர ... ... .... வடிவேல் வருகவருக.

வேல் என்னும் ஆயுதம் தாங்கியவரே! வருவீராக. மயில்மீது அமர்ந்த பெருமானே! வருக, வருக. இந்திரன், அக்னி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் எட்டுத் திக்குப்பாலகர்களும் போற்றும் மந்திரசக்தி பொருந்திய கூர்மையான வேல் அடியேன் துன்பத்தைத் தீர்க்க வருவதாக; வருவதாக.

11–16 வாசவன் ... ... ... சடுதியில் வக.

(தெய்வயானை அம்மையாரைத் திருமணம் புரிந்து கொண்டமையால்) தேவேந்திரனின் மருமகனுக விளங்கு பவரே! வருவீராக. அன்பு பொருந்திய குறப்பெண்ணுகிய வள்ளியம்மையின்நினைவுகொண்டவரே! வருக. ஆறுமுகம் பொருந்தியதலைவரே! வருக. பகைவர்களைப்பொடியாக்கும் வேல் ஏந்தியவரே! அடியேனுக்கு நாள்தோறும் காட்சி அளிப்பீராக. சிராமலையில் கோயில் கொண்டு விளங்கும் வேலாயுதரே! உடனே என்மனத்தில்வந்துபொருந்துவீராக.

17–22 ரவண .... ....... ஐயா வருக.

[இப்பகுதியில் மந்திரக்குறியீடுகள் அமைந்துள்ளன. பிழையில்லாமல் நிதானமாகப் பாராயணம் செய்ய வேண் டும் என்பர் பெரியோர். முருகன் ஆறெழுத்து மந்திரம் ஓம்

'சரவணபவ' என்பது. இதனைச் 'சரஹணபவ' என்று கொண்டும் சில பதிப்புக்களில் அமைக்கப்பட்டுள்ளது. இதில் உள்ள எழுத்துக்களை முன்னும் பின்னும் மாற்றியும் பிஜாட்சரங்களோடு சேர்த்தும் அடுக்கியும் வேகம் கொடுத்தும் நூலாசிரியர் அமைத்துள்ளார். ] ரவணபவச......சரவ என்னும் மந்திரவடிவமாகவிளங்கும் வீரனே! உன்னுடைய திருப்பெயரைச் செபித்து நமஸ்கரிக்கிறேன். நிபவசரஹண என்னும் அட்சரங்களின் வடிவமாகவிளங்கும்பெருமானே! நீ நிற நிற என்னும் ஓசைவருமாறு மயில்மீதுஏறி வருக வருக. அசுரர் குலத்தை அழித்த தேவசேனபதியே! எழுந்தருள்வீராக.

23–26 என்னை .... .... .... வேலோன் வருக.

அடிமையாகிய என்னை ஆட்சிசெய்யும் இளமை பொருந்திய முருகப்பெருமானே! பன்னிரண்டு கைகளில் வேல், அம்பு, வாள், சக்கரம், பாசம் (கயிறு), அபயம் என்னும் ஆறும் ஆறு வலக்கைகளிலும் வச்சிரம், வில், கேடயம், கோழிக்கொடி, அங்குசம், வரதம் என்னும் ஆறும் ஆறுஇடக்கைகளிலும்கொண்டுஎழுந்தருளி வருக விசாலமான பன்னிரண்டு கண்களும் அருள்ஒளி வீச விரைவாக எழுந்தருளி வந்து அடியேனைக் காப்பாற்றுக. வேல் ஏந்திய பெருமானே! வருக.

27–33 ஐயும் ... ... ... தினம் வருக.

[27 முதல் 32 வரையுள்ள அடிகளில் பிஜாட்சரங்கள் கூறப்பட்டுள்ளன. மந்திரத்தின் பயனை அடைவதற்குப் பிஜாட்சரங்களுடன் உச்சரிக்கவேண்டும் என்பது விதி. இவைகளின் பொருளைக் குருமூலமாக உபதேசம் பெற்று அறியவேண்டும் வித்து எழுத்துக்கள் (பிஜாட்சரங்கள்) ஹைம், ஹ்லீம், ஸௌம் என்பன. ஆசிரியர் இவைகளை

முறையே ஐ. கிலி, சௌ எனக்கொண்டு பலவிதமாக மாற்றி மாற்றிக் கூறியுள்ளார்.] ஐயும் கிலியும், முறைமையுடைய சௌவும் என்றும் உய்வதற்குக் காரணமான சௌவும் பிராணன் ஆகிய ஐயும் கிலியும் என்றும் கிலியும் சௌவும் விளங்குகின்ற சோதிவடிவமான ஐயும் என்றும் கூறப்படும் எழுத்துக்கள் நிலையாக என்முன் நாள்தோறும் தோன்றவேண்டும். சண்முகன் என்று சொல்லப்படும் பெயர் வடிவமும் ஹ்ரீயும், தனியொளி பொருந்திய அனைத்துக்கும் மூலாதாரமான சிவபெருமான் மகனாகிய குகன் தினந்தோறும் அடியேனிடம் வந்தருள்க.

33–46 ஆறுமுகமும் ... ... ... முழங்க.

ஆறு திருமுகங்களும், அழகு பொருந்திய கிரீடங்கள் ஆறும், திருநீறு அணியப்பெற்ற நெற்றியும் நீண்டபுருவங்களும், பன்னிரண்டு கண்களும் பவளம்போன்ற சிவந்த திருவாயும், நெற்றியில் விளங்கும் நல்ல நெறியோடு செய்யப்பெற்ற நவமணிகளால் ஆகிய சுட்டியும், பன்னிரண்டு திருச்செவிகளில்விளங்கும் குண்டலங்களும், பன்னிரண்டு வலிமைபொருந்திய தோள்களிலும் அழகான மார்பிலும் பலவகைப்பட்ட ஆபரணங்களும் மதாணி எனப்படும் பதக்கமும் அணிந்துகொண்டு (எழுந்தருள்வீராக.) தேர்ந்து எடுக்கப்பட்ட நல்ல மணிகளைப்பொருத்திக் கட்டப்பெற்ற நவரத்தின மாலையும் மூன்று புரிகளாக விளங்கும் பூணூலும் முத்து ஆரமும் அணிந்த மார்பும் புகழ்ந்து பாடுதற்கு உரிய அழகுமிக்க திருவயிறும் கொப்பூழும் அசையும்படியான இடுப்பில் பிரகாசமாக் ஒளிவீசும் பட்டாடையும் ஒன்பதுவகை மணிகள் பதிக்கப்பெற்ற நல்ல மார்புக்கவசமும் இரண்டு தொடைகளின் அழகும் இரண்டு முழந்தாள்களும் திருவடிகளில் சிலம்பின் ஒலியும் முழங்க (எழுந்தருள்வீராக.)

47–56 செககண .... .... .... முந்து.

வானுலகத்திலிருந்து பூமிக்கு எழுந்தருளிப் பொருந்தி இருப்பவனே! பூமியில் பொருந்தியிருப்பவனே! பூமியில் பொருந்தியிருப்பவனே! [மொக மொக என்பது 'டிங்குகு' என்பதுவரை மந்திரஒலிக்குறிப்புக்கள்] எல்லாவற்றுக்கும் மூலமாக விளங்கும் விந்துவே! மயில் வாகனத்தில் வீற்றிருக்கும் நாதுவே! முருகன் ஆகிய வேளே! முற்படு - அடியேனுக்கு அருள்செய்ய முற்படு - முந்து.

57–64 என்றனை .... .... .... பாலனைக் காக்க.

அடியவனாகிய என்னைக் காப்பாற்றும் திருஏரகத்தில் (சுவாமிமலையில்) எழுந்தருளி விளங்கும் செல்வமே! உன் மகனாகிய அடியேன் வேண்டிக்கொள்ளும் வரங்களை மகிழ்ச்சியோடு அருள்வீராக. லாலா, லாலா, என்று பாடித் துதிக்கும் பெருமையும் லீலையாகிய திருவிளையாடல்களும் பொருந்திய விநோதமானவனே! என்று கூறித் துதித்து உன்னுடைய திருப்பாதங்களையே உறுதி தருபவை என்று நினைத்து வணங்கும் அடியேனுடைய தலையின்மீது நின் இரண்டு திருவடிகளை வைத்துத் திருவடி தீக்ஷைபுரிந்து காப்பாயாக. என்னுயிருக்கும் உயிராய் விளங்கும் இறைவனே! காத்து அருள்க. பன்னிரண்டு விழிகளாலும் அருட்பார்வை செலுத்தி மகனாகிய என்னைக் காப்பீராக.

65–68 அடியேன் .... .... .... வேலவர் காக்க

அடியவனாகிய என் முகத்தினை அழகு பொருந்திய தேவரீருடைய வேல்காப்பதாக. விபூதி பூசப்பட்ட நெற்றியைப் புனிதத்தன்மையுடைய வேல் காப்பதாக. இரண்டு கண்களையும் ஒளிவீசும் வேல் காப்பதாக. பிரமனால் விதிக்கப்பட்ட காதுகள் இரண்டையும் வேலாயுதத்தையுடைய வீரே! காப்பீராக.

69–72 நாசிகள் ... ... ... செவ்வேல் காக்க.

மூக்கின் துவாரங்கள் இரண்டையும் நன்மை செய்யும் வேல் காப்பதாக. உன் புகழையே இதுவரை பேசிய வாயைப் பெருமை பொருந்திய வேல்காப்பதாக. முப்பத் திரண்டு பற்களையும், கூர்மையான முனையையுடைய வேல் காப்பதாக. நின் துதிகளைச் சொல்லிய நாக்கைச் சிறப்பு மிக்க வேல் காப்பதாக.

73–76 கன்னம ... ... ... திருவேல் காக்க.

இரண்டு கன்னங்களையும் ஒளிபொருந்திய வேல் காப் பதாக. அடியனுகிய என்னுடைய இளமையான கழுத்தை இனிமை பொருந்திய வேல் காப்பதாக. மார்பை மணிகள் பதிக்கப்பட்ட கூர்மையான வேல் காப்பதாக. ஒன்ரேடு ஒன்று நெருங்கிய இளமை பொருந்திய முலைகள் பொருந் திய மார்பினைத் திருவேல் காப்பதாக.

77–80 வடிவேல் ... ... ... பருவேல் காக்க.

கூர்மையான வேல் இரண்டு தோள்களையும் வளப்பம் அடையும்படி காப்பதாக. இரண்டு பிடர்களையும் பெருமை மிக்க வேல் காப்பதாக. முதுகுப்பகுதியை அழகுடன் கூடியதாகிய அருள் பொருந்திய வேல் காப்பதாக. விலாவில் அமைந்துள்ள பதினறு எலும்புகளையும் பருத்த வேல் காப்பதாக.

81–84 வெற்றிவேல் ... .... .... அயில்வேல்.

வெற்றியையுடையவேல், வயிற்றைப்பிணி இல்லாமல் நன்கு விளங்கும்படி காப்பதாக. சிறிய இடை அழகாக இருக்கும்படி சிறப்புமிக்க வேல் காப்பதாக. கரு உற்பத்தி யாவதற்குக் காரணமாக உதவும் நரம்பாகிய கயிற்றை

நன்மை உண்டாக்கும் வேல்காப்பதாக. ஆண் குறியாகிய இரண்டு பீஜங்களையும் கூர்மை பொருந்திய வேல் காப்பதாக. (84 ஆம் வரி " ஆண்பெண் குறிகளை அயில்வேல் காக்க " என்று சிலபதிப்புக்களில் காணப்படுகிறது.)

85–88 பிட்டம் ... ... ... கதிர்வேல் காக்க.

இரண்டு பிட்டங்களையும் (முதுகின் – இடையின் – கீழ்பகுதி) பெரியவேல் காப்பதாக. வட்டமான சுருங்கு தசையாலான ஆசனவாயிலே வலிமைமிக்க வேல் காப்பதாக. பருத்துத்திரண்ட இரண்டு தொடைகளையும் பெரிய வேல் காப்பதாக. கணைக்கால் இரண்டையும், முழந்தாள் இரண்டையும் ஒளிபொருந்திய நின் திருக்கைவேல் காப்பதாக.

89–93 ஐவிரல் ... ... ... நற்றுணையாக.

ஒவ்வொன்றிலும் ஐந்துவிரல்களைக்கொண்ட இரண்டு கால்களையும் கருணைமிக்க வேல் காப்பதாக. முன்கைகள் இரண்டினையும் போர் செய்யும் ஆற்றலுடைய வேல் காப்பதாக. பின்கைகள் இரண்டிலும் இளையவளாகிய இலக்குமி தங்குமாறும், அடியேனுடைய நாக்கில்சரஸ்வதி நல்ல துணையாகப் பொருந்துமாறும் அருள்செய்க.

94–96 நாபிக்கமலம் ... ... ... எதிர்வேல் காக்க.

தாமரை போன்ற கொப்பூழை நல்ல வேல் காப்பதாக. மூன்று விதமாகப் பிரித்துப் பேசப்படும் நாடிகளைக் கூர்மையான, முனையையுடைய வேல் காப்பதாக. அடியேன் எப்போதும் தளர்ச்சி அடையாதபடி பகைவரை எதிர்க்கும் வேல் காப்பதாக.

97–102 *அடியேன் ... ... ... சதுர்வேல் காக்க.*

அடியவனாகிய என்னுடைய சொல்லில் தடை ஏற்படும் காலத்தில் மிகவிரைவாக வந்து பொன்வேல் காப்பதாக. நாள்தோறும் வரும் பகல் பொழுதில் வயிரம் பதிக்கப் பெற்றவேல் காப்பதாக. பாதி இரவுப் பொழுதிலும் அந்த வேலே காப்பதாக. முன்னிரவுக் காலத்திலும் நடு இரவுப் பொழுதும் தாமதம் ஏற்படாமல் உடனே வந்து திறமை மிக்க வேல் காப்பதாக.

103–106 *காக்க .... .... .... பாவம் பொடிபட.*

காப்பதாக; காப்பதாக; பொன்வேல் அடியேனைக் காப்பதாக. நோக்குவதாக; நோக்குவதாக; ஒருநொடியில் அடியேனைக் காப்பதற்காக நோக்குவதாக. வாழ்க்கையில் தடங்கல் ஏற்படாதபடி தடைகளை வேல்தாக்குவதாக. பாவங்கள் எல்லாம் தூளாகும்படி அதனைக் கோபங் கொண்டுபார்ப்பதாக; பார்ப்பதாக.

107–114 *பில்லிசூனியம் ... ... ... துன்பசேனையும்.*

பகைவர்கள், மாந்திரீகர்களைக் கொண்டு ஏவிவிடும் பில்லிஎன்னும்பேயும்துன்பங்களை உண்டாக்கிக்கொல்லும் தன்மையுடைய ( சூனியம் என்னும் ) மாரண வித்தையும் பெரிய பகையும்நீங்குவதற்கு (அருள்புரிக.) வலிமைமிக்க பூதங்களும் பெரும்பலம்பொருந்திய பிசாசுகளும், மந்திரங் களுக்குக்கட்டுப்படாத துன்பம்தரும்பேய்களும் குழந்தை களை உணவாகக் கொள்ளும் பொருட்டு வீட்டின் பின்புற வாயிலில்காத்துக்கிடக்கும் முனிகளும், வாயில்நெருப்பினை யுடைய பிசாசுகளும், குள்ளமான உருவத்தையுடைய பேய்களும், பெண்களைத் தொடர்ந்து சென்று பிடித்துக் கொண்டு துன்பம் செய்யும் 'பிரமராட்சம்' என்னும் பேய்

களும் இரிசி என்று சொல்லப்படும் ருதுவாகும் தன்மை இல்லாத பெண்வடிவமுடைய பேய்களும், காட்டேரி என்று கூறப்படும் துஷ்டப்பேயும் ஆகிய இத்தகைய துன்பப்பேய்கள் அடியேனைக் கண்டமாத்திரத்தில் பயந்து கூச்சலிட்டுக் கலக்கம் அடைந்து ஓடுமாறு ( அருள்புரிய வேண்டுகிறேன். )

115–120 எல்லினும் ... ... ... அரும்பாவைகளும்.

பகற்பொழுதிலும் இரவுப்பொழுதிலும் எதிரே தோன்றித் துன்பப்படுத்தும் அண்ணர்கள் என்று கூறப்படும் தேவதைகளும் அதிக அளவு பூசைகளை ஏற்றுக்கொள்ளும் காளியும், காளியைச் சேர்ந்த படைகளாகிய பல தேவதைகளும், ஆங்காரம் உடைய பூதங்களும், இன்னும் பலவாக உள்ள பேய்களும் பல்லக்கில் ( தண்டி ) ஏறிப் பவனிவரக்கூடிய பேய்களும் கீழான தன்மைகள் பொருந்திய பேய்களும் பிறருக்கு மரணம் சம்பவிக்கவேண்டும் என்பதற்காக மந்திரம் செய்து யானை நிற்கும் இடத்தில் அதன் அடியின் கீழே புதைக்கப்பட்ட அருமையான மாவினால் ஆன பொம்மைகளும் ( படிவங்கள் ) அடியேனது பெயரைக் கூறிய உடனே அவைகளின் மேலே இடிவிழுந்து பயந்து ஓட ( அருள்புரிய வேண்டுகிறேன். )

121–128 பூனைமயிரும் ... ... ... குலைந்திட.

காட்டுப் பூனையின் மயிர், தலைப்பிள்ளைகளின் எலும்பு, பெருவிரலின் நகம்; நீண்ட ரோமங்களையுடைய மண்டை ஓடு என்பவைகளைப் பல பதுமைகளுடன் மந்திரம்செய்து பிறரை அழிப்பதற்காகப் புதைத்துவைத்த வஞ்சனையான வை[illegible]ளையும் என் பகைவர் கற்றுவைத்திருக்கும் மந்திர நூ[illegible]கிய ' ஒட்டியம் ' என்பதை அறிந்ததால் உண்டாகிய

கருவத்தையும், ஒட்டியம் என்ற அந்தநூலில் கூறப்பட்டுள்ளபதுமையும், பேய்களுக்குத் தட்சணையாக வைக்கப்பட்டசோறும், மந்திர மையும் பைத்தியம் பிடித்துத்தானே அலைந்து திரியும்படி செய்யும்செயலும் முதலியவை அடியேனைக் கண்டால் உருக்குலைந்து கலங்கி ஓடிட ( அருள் புரிய வேண்டுகிறேன். )

129-134 மாற்ருன் .... .... ... கதறிடக் கட்டு.

பகைவரும் வஞ்சனைகள் செய்பவரும் எமதூதரும் என்னைக்கண்ட மாத்திரத்தில் பயந்து திடுக்கிட்டுவந்து வணங்கவும், அஞ்சிநடுங்கவும், பிரமிப்பு அடைந்து கீழே விழுந்துபுரளவும், வாய்திறந்து கதறி புத்தி பேதலித்து ஓடவும், பூமியில்மோதிக்கொள்ளவும், பேய்கள், பூதங்கள் முதலியவைகளையும்பகைவர்களையும்பாசக்கயிறுகொண்டு கட்டுக. அங்கங்கள் ஒவ்வொன்றும் கதறி அழும்படி உடனே கட்டுவீராக.

135-138 கட்டி .... .... .... செதிற்செதிலாக.

கைகளும் கால்களும் முறியும்படியும் கதறும்படியும் கட்டுக; கட்டுக; கட்டுக. அப்படிக் கட்டிக் கீழே உருட்டி விடுவீராக. கண்கள்பிதுங்கிவருந்தும்படிமோதுக;மோதுக; செதிற்செதிலாக விழும்படி கொல்க; கொல்க.

139-142 சொக்கு .... .... .... தணலதுவாக.

சொக்கவைப்பவனே! அழகானவனே! சூரனுக்குப் பகைவனாகிய அழகனே! கூர்மைபொருந்திய வடிவேலால் அவைகளைக் குத்துக; குத்துக; கையால் பிடித்துக்கொள்க! பிடித்துக்கொள்க. சூரியனிடம் பொருந்தியுள்ள எரியும் நெருப்புக்கொண்டு எரித்திடுக. அவைகள் அந்த நெருப்பில் நெருப்பாகிவிடும் வண்ணம் எரித்திடுக; தணலால் எரிப்பீராக; தணலால் எரிப்பீராக.

143–148 விடுவிடு ... .... ... எளிதுடன் இறங்க.

உன் அடியார்களைத் தாக்குதற்குவரும் புலி பயந்து ஓடவும், பெரிய நரிகளும், குள்ளநரிகளும், நாய்களும், எலிகள், கரடிகள் ஆகியனவும் இனிமேல்பயந்து ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாக ஓடவும், தேள், பாம்பு செய்யான், பூரான்முதலிய மிக்கவிஷம் பொருந்தியஜந்துக்கள், அவைகள் தீண்டியதால் உடலின் மேல்பாகமாகிய மண்டைவரை ஏறியவிஷங்கள் உடனே எளிதாக இறங்கவும்நின்வேலை விரைவாக அவற்றின்மீது விடுக; விடுக. (145, 146 ஆம் வரிகள் சிலபதிப்புக்களில் 'புலியும் நரிவயப் போத்தொடு நாயும்' 'எலியும் கரடியும் இனித்தொடர தோட' என்று காணப்படுகிறது. 148 ஆம் வரியில் 'எளிதினில் இறங்க' என்று காணப்படுகிறது.) விலங்கு, விஷ ஜந்துக்களால் உண்டாகும் தீமையை நீக்குக என்பதாம்.

149–157 ஒளிப்பும் ... .... நீயெனக்கருள்வாய்.

கண்மறைப்பு நோயும், நரம்புகள் சுளுக்கிக் கொள்வதும், ஒருபக்கத்தலைவலியும், வாதநோயும், குளிர்நோயும் கால்கை வலிப்புநோயும், பித்த நோயும், சூலைவியாதியும், க்ஷயரோகமும், குன்மநோயும், சோர்வு உண்டாக்கும் சிரங்குவியாதியும, கை, கால்குடைச்சலும், சிலந்திநோயும், குடலில் தோன்றும் விப்புரிதி என்னும் வியாதியும், விலாப் பக்கங்களில் தோன்றும் பிளவைநோயும், பரவும் தன்மை கொண்ட தொடைவாழை என்னும் நோயும், கரப்பான் நோயும், படுவன் என்னும் நோயும், கைகளிலும் கால்களிலும் வரும் சிலந்திநோயும், பல்குத்தல், பல்லரணை, பெரிதாகத் தோன்றும் அரையாப்பு என்னும் கட்டிநோய் முதலிய எல்லாவிதமான கொடுமையான வியாதிகளும் அடியேனைக்கண்ட உடனே நிற்காமல் ஓடுவதற்கு அருள்செய்து காப்பாயாக.

158–161 ஈரேமுலகமும் ... ... ... உன்திருநாமம்.

பதினான்கு உலகங்களும் எனக்கு உறவுஉடையதாய் இருக்கவும் ஆண்கள், பெண்கள் ஆகியஎல்லா மக்களும்' பூமியை அரசாட்சி செய்யும் அரசர்களும் மகிழ்வோடு எனக்கு உறவினராகவும், எனக்கு உதவவும், உன்னைத் துதித்து உன் நாமம்கூறிப் போற்றவும், (அருள்புரிவாயாக.)

162–166 சரஹண .... ... ... சிறை விடுத்தாய்.

சரவணைப் பொய்கையில் தோன்றியவனே! மலைகளை இருப்பிடமாகக் கொண்டு அருள்செய்யும் ஒளிமயமான கடவுளே! முப்புரங்களை அழித்தசிவபெருமானைஒத்தவனே! விளங்கும் பிரகாசமாக இருப்பவனே! பரிபுரம் என்னும் பாதகிண்கிணியை அணிந்தவனே! உயிர்களின் பாவங்களை ஒழிப்பவனே! திருமாலுக்கு மருமகனே! தேவர்கள் உன்னையும் உன் திருநாமத்தையும் தோத்திரம் செய்து வேண்டிக்கொண்டதால் சூரசம்ஹாரம் செய்து அமராவதி நகரத்தைக் காத்துத் தேவர்களையும் சிறையிலிருந்து விடுதலை செய்தாய்.

167–172 கந்தா ... ... ... பாலகுமாரா.

கந்தனே! குகனே! ஒளிவீசும் வேலாயுதனே! கார்த்திகைப் பெண்கள் அறுவர்வளர்த்த மகனே! கடப்ப மாலை தரித்தவனே! கடம்பன் இடும்பன் ஆகியோரை அழித்த இனிய வேலினைஏந்திய முருகனே! திருத்தணிகை மலையில் எழுந்தருளியவனே! சங்கரனுடைய புதல்வனே! கதிர்காமம் என்னும் ஈழநாட்டுத்தலத்தில் எழுந்தருளிஒளி விசும் வேல் ஆயுதம் தாங்கிய முருகனே! பழனி என்னும் தலத்தில் வாழ்கின்ற பால பருவத்தினையுடைய குமரப் பெருமானே!

173–177 ஆவினன்குடி ... .... .... யானுனைப்பாட.

திருஆவினன்குடியில் எழுந்தருளியிருக்கும் அழகான வேலாயுதத்தை உடையவனே! திருச்செந்தூரில்அமைந்த சிறந்த மலையில் வீற்றிருக்கும் செங்கல்வராயன் என்ற திருப்பெயர் கொண்டவனே! சமராபுரி என்னும் தலத்தில் வாழும் ஆறுமுகங்களைக்கொண்ட அரசனே! கருமையான கூந்தலையுடைய சரஸ்வதி என்னுடைய நாவில் பொருந்த அடியேன் நின்புகழ் பாடுகின்றேன்.

178–186 எனைத்தொடர்ந்து .... சிறப்புடன் வாழ்க.

என்னை ஒருபொழுதும் விடாமல் பற்றிக் கொண்டு இருக்கும் என் தந்தையாகிய முருகன் என்னும் உன்னைப் புகழ்ந்து பாடினேன்; ஆடினேன்; ஆடினேன். திரு ஆவினன்குடிப்பெருமானாகிய உன்னை எண்ணி விபூதியை விருப்பத்துடன் பூசிக்கொண்டேன். விபூதிபூசிக்கொண்டதால் உலகபாசத்தால் ஏற்படும் செயல்களின் ஆசை நீங்கப்பெற்று உன் திருவடியை அடையவும் உன் திருவருள் அடியேனுக்கு உண்டாகவும், உணவும் பொன்னும் மேன்மேலும் உண்டாகவும் அன்புடன் இரட்சிப்பாயாக. வேலாயுதனாகிய உமது செல்வாக்கினால் அடியேன் சிறப்புக்கள் பலவும் அடையப்பெற்று வாழ்வேனாக.

187–192 வாழ்க வாழ்க .... ... வறுமைகள் நீங்க.

மயில் வாகனத்தை உடையவனே! வாழ்க; நின்னுடைய கூர்மையான வேலாயுதம் வாழ்க; மலைகளில் எழுந்தருளியிருக்கும் குருவே! வாழ்க; மலையில் வாழும் வேடுவர் குல வளர்ப்பு மகளாகிய வள்ளியம்மையுடன் வாழ்க; உன்னுடைய கோழிக்கொடிவாழ்க; என்னுடைய ஏழ்மை நீங்குவதாக.

193-196 எத்தனைகுறைகள் .... .... பெற்றவளாமே

முருகப்பெருமானே! என்னைப்பெற்ற தந்தையாக விளங்குபவன் நீ. குருவாக விளங்குபவனும் நீயே. குறவர் குலப்பெண்ணாகிய வள்ளியே என்னைப்பெற்ற தாய்; ஆகவே, எத்தனை குற்றங்களைச்செய்தபோதிலும் எவ்வளவு பிழைகளைச்செய்தபோதிலும் அவற்றைப் பொறுத்துக் கொண்டு என்மீது கருணைகாட்டுவது உன்கடமையாகும்.

197-200 பிள்ளை என்று ... .... கவசம் விரும்பிய.

முருகனாகிய உனக்கு அடியேன் பிள்ளை என்பதால் அன்பையும் பிரியத்தையும் செலுத்தி, மைந்தனாகிய என் மீது மனமகிழ்ச்சி கொள்வதோடு, கந்தர் சஷ்டி கவச மாகிய இதனை விருப்பத்துடன் பாராயணம் செய்து உன்னையே அடைக்கலமாகக் கொண்டுள்ள அடியார்கள் செழிப்புடன் வாழ அருள் செய்வாயாக.

201-208 பாலன் .... ... ... நீறணிய.

முருகனின் பாலனாகிய, தேவராயன் என்னும் பெயர் கொண்ட யான் போற்றிக் கூறிய இத்துதியை - கந்தர் சஷ்டி கவசமாகிய இம் மந்திர நூலை - தினந்தோறும் காலையிலும் மாலையிலும் ஆசாரத்துடன், உடலைப் பரி சுத்தப்படுத்திக்கொண்டு, அன்புடனும் ஒரேநினைவுடனும் மனம் சிறிதும் கலங்காமல், ஒருநாளைக்கு முப்பத்தாறு உருவீதம் மனத்துக்குள்ளே சொல்லிக் கொண்டு உரு வேற்றி, (ஜெபம் செய்து) திருநீறுபூசிக்கொண்டு, முருகனை வணங்குக

209–214 அஷ்டதிக்குளோர் ... .... ... வாழ்வர்.

இங்ஙனம் கந்தர் சஷ்டி கவசத்தை முப்பத்தாறு உரு ஒதி, செபித்து, திருநீறணிந்து முருகனை வணங்குபவர்க்கு எட்டுத் திசைகளிலும் உள்ளவர்கள் வசியமாவர். எட்டுத் திசைக்குமுரிய இந்திரன், அக்கினி, இயமன், நிருதி வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் தலைவர்கள் ஒருசேரவந்து அருள்செய்வர். பகைவரெல்லாரும் வந்து வணங்குவர். ஒன்பது கிரகங்களும் சந்தோஷமடைந்து நன்மைகளை அளிக்கும். புதிய மன்மதன் என்று சொல்லும்படி நல்ல அழகுபெறுவார்கள். எந்தநாளிலும் பதினாறு வயது உடையவர்கள்போல இளமையுடன் நிலைபெற்று வாழ்வார்கள்.

215–220 கந்தர்கை .... ... ... சங்காரத்தடி.

கந்தப் பெருமானின் திருக்கரத்தில் விளங்கும் வேல் போன்று பகையை அழிப்பதும் கவசம் போல் பாதுகாப்பதும் ஆகிய இதன் ஓர் அடியை முறைப்படி - பொருள் உணர்ச்சியோடு தியானிப்பவர்களுக்கு உண்மைநெறிகள் விளக்கமாகத் தெரியும். இக்கவச அடிகளைக் கண்களால் பார்த்தாலே பேய்களும் அவரைக் கண்டு மனம் நடுங்கி ஓடும். எல்லாவகையான பகைகளையும் அழிக்கக் கூடியதாகிய இச்சஷ்டிகவசத்தின் அடி தீயவர்களைப் பொடிப் பொடி ஆக்கிவிடும். நல்லோரது மனத்தில் தங்கி நடனம் ஆடும.

221–226 அறிந்தெனது ... .. ... சேவடிபோற்றி.

என்மனம் அஷ்டலட்சுமிகளில் வீரலட்சுமிக்கு விருந்தாக அமையட்டும். (என்மனத்தில் தங்குவாளாக.) சூரபதுமனை அழியும்படி துன்பப் படுத்திய கையால் இருபத்தேழுபேருக்கு அமுதத்தை மகிழ்ச்சியுடன் கொடுத்த குருபரனும் பழநிமலைமீது எழுந்தருளி இருப்பவனும் ஆகிய

சிறுபிள்ளை வடிவினை உடைய முருகனின் சிவந்த திருவடி களைப் போற்றித் துதிக்கின்றேன்.

227–230 எனைத்தடுத்து .... .... கோவே! போற்றி.

நான் தீயவழிகளில் போகாதபடி தடுத்து என்னை ஆண்டுகொள்க. எனது மனத்தில் தங்கிய அழகான வடிவம் பொருந்திய வேலவனே! போற்றி! தேவர்களின் சேனைக்குத் தலைவனாக விளங்கிய பெருமானே! போற்றி! வேடுவரின் வளர்ப்பு மகளாகிய வள்ளியின் மனத்தை மகிழச் செய்யும் தலைவனே! போற்றி.

231–234 திறமிகு .... .... ... வேளே! போற்றி.

வலிமை மிக்க அழகிய திருமேனியை உடையவனே! போற்றி. பகைவர்களுக்கு இடும்பையை (துன்பத்தைத்) தரும் வேலாயுதம் உடையவனே! பகைவர்முன் காட்டும் தருக்கு உடையவனே! போற்றி. கடப்ப மாலையை அணிந் தவனே! போற்றி. கந்தனே! வெட்சிப்பூ மாலையை அணிந்த குமரவேளே! போற்றி.

235–238 உயர்கிரி .... .... .... சண்முகா! சரணம்.

உயர்ந்த கந்தமாதனம் என்னும் மலையில் பொருந்திய பொன்னால் ஆகிய சபைக்குத் தலைவனே! மயில் மீது ஏறி நடனம் புரிபவனே! உன் திருவடி மலர்களே சரணம். 'ஓம் சரஹணபவ' என்ற ஆறெழுத்து மந்திரத்தின் வடிவ மாக விளங்குபவனே! சரணம்! ஆறுமுகப்பெருமானே! சரணம்!

கந்தர் சஷ்டி கவசம்

தெளிவுரை முற்றிற்று.

## திருமுருகாற்றுப்படை

### வெண்பாக்கள்

---

திருமுருகாற்றுப்படையின் பின்னர்ப் பிற்காலத்துச் சான்றோர் இயற்றியமைத்தனவாகக் காணப்பெறும் இனிய அரிய வெண்பாக்கள் பத்துள்ளன; அவை வருமாறு:-

குன்றம் எறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய் - என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் உள்ளத் துறை. 1

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. 3

இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா - முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. 5

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன். 6

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே - ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா - பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி. 8

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு - சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால் - முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைந்த எல்லாந் தரும். 10